ஸ்ரீ குருப்யோ நம:

# ஒன்றென்றிரு




**பராவித்யா வழங்கும் பாடங்கள்**

ஸ்ரீ குருப்யோ நம:

ஹரி ஓம்

# ஒன்றென்றிரு

இங்கு நாம் கூற வருகின்ற உண்மைகள் என்ன எனில், மற்ற ஜீவர்களுக்கு இல்லாத மகத்துவம் வாய்ந்த ஐந்தறிவுகளுக்கு மேலான ஒரு உன்னத அறிவாக **“மனம்”** என்ற ஒன்று கொடுக்கப் பட்டதினால் **“மனிதன்”** என்று நாம் அழைக்கப் படுகின்றோம்.

அத்தகைய உயர் அறிவான ஆறாம் அறிவை மற்ற ஐம்புலன்களைப் போன்று ஸ்தூலத்தில் இல்லை என்றும், அது ஏதோ கண்ணிற்குத் தெரியாமல் இருக்கின்றது என்றும் நாம் தவறாக எண்ணிக் கொண்டிருக்கின்றோம்.

ஆனால், உண்மை என்னவெனில், அந்த சூக்ஷுமமான கண்ணிற்குத் தெரியாத மனம் மட்டுமே, கண்களால் காண முடிகின்ற இந்த மனித உடலாக மாறி அதன் ஆசைகள் அனைத்தையும் அனுபவிக்க

விரும்புகின்றது என்ற பேருண்மையை நாம் அவசியம் அறிந்தாக வேண்டும்.

அதனால்தான், இந்த மனதின் அனைத்து ஆசைகளும் இந்த உடலின் வாயிலாக நிறைவு செய்யப்படுகின்றன. மேலும், நமக்கு உண்டாகும் மகிழ்ச்சியும், துக்கமும் இந்த மனதின் வாயிலாகவே உணரப்படுகின்றன. அந்த உணர்ச்சிகளை இந்த உடல் வெளிப்படுத்துகின்றன என்ற உண்மையை அவசியம் நாம் அனைவரும் உணர்ந்தாக வேண்டும்.

மனதைப் பற்றி பல்வேறு புத்தகங்களும், ஆடியோக்களும் ஏராளமாக உள்ளன. ஆனால், நாம் இங்கு வர வருகின்ற மனதின் ஆராய்ச்சிகள் அனைத்தும் அனுபவ உண்மைகளாக மட்டுமே இங்கு பகிரப்படுகின்றன. மேலும், இந்த உண்மைகளை உணர்வதற்கான சரியான சாதனமாக சாஸ்திரத்தை மட்டுமே நாம் சரியாக கையில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

அதைவிடுத்து, மற்றவர்கள் வாய்க்கு வந்தபடி கூறுகின்ற வழியிலே, மனதை சூனியம் ஆக்குவது, மனோநாசம் ஆக்குவது, மனமற்ற நிலையில் நிர்விகல்ப நிலைக்குப் போவது என்பது எதுவுமே, இந்த மனித உடலைப் பொருத்தவரை, அதன் இயல்பிற்கு முற்றிலும் முரணாக நாம் முயற்சிக்கின்ற

முட்டாள்தனமான காரியம் என்பதை அனைவரும் அவசியம் அறிந்தாக வேண்டும்.

ஏன் எனில், இந்த உடலுக்கு கொடுக்கப்பட்ட எந்த அவயவங்களையும், அதாவது, உடல் உறுப்புக்களை இது வேண்டும், அது வேண்டும் என்று நாம் கேட்டுப் பெற்றுக் கொண்டு வரவில்லை.

நமக்கு எது இருந்தால் இந்த இன்பத்தை அனுபவிக்க முடியும் என்று நாம் தீர்மானிக்கவில்லை. அவைகள் அனைத்தையும் அந்த மனமே தீர்மானித்து தனக்குத் தேவையான உடல் கட்டமைப்பை உண்டாக்கிக் கொள்கின்றது.

அதனால்தான், அது விரும்பும் விசய சுகங்களை கண்களின் வாயிலாக காட்சிகளாக கண்டு இன்புறுகின்றது. காதுகளின் வாயிலாக விசயங்களை கேட்டு இன்புறுகின்றது. மூக்கின் வாயிலாக முகர்ந்து இன்பத்தை அடைகின்றது, நாக்கின் வாயிலாக சுவைத்து இன்பத்தை அனுபவிக்கின்றது.

அதற்குத் தேவை, இத்தனை சுகங்களையும் அனுபவிக்க ஒரு உடல் மட்டுமே வேண்டும்.

அவ்வளவே!

அதுவும், அந்த உடலை மனம் தன் ஆசைகளுக்கு ஏற்றவாறே வடிவமைத்துக் கொள்கின்றது என்பதே உண்மை.

உதாரணமாக, பறக்க ஆசைப்படுபவன் பறவையாகவும், மாமிசங்களை அதிகம் புசிக்க விரும்புபவன் அதற்கான மிருகமாகவும், எப்பொழுதும் நீச்சல் அடித்துக் கொண்டு நீந்த விரும்புபவன் நீரில் வாழும் உடலகளையும், அதிகம் சுவைக்க விரும்புபவன், மாடு போன்ற மிருகங்களாகவும் மாறி, மாறிப் பிறக்கின்றான்.

இவைகள் அனைத்தும் மனதின் ஆசைகள் என்பதை நாம் அனைவரும் நன்கு அறிய வேண்டும்.

இதற்கெல்லாம் ஆதாரம் என்ன என்று கேட்டீர்களேயானால், இங்கு கூறவருகின்ற எதுவுமே நம்முடைய சொந்தக் கருத்துக்கள் கிடையாது.

அனைத்தும் சாஸ்திரம் காட்டிய வழியில் கற்று, அனுபவமாக்கிய அரிய உண்மைகளை மட்டுமே இங்கு கூறப்படுகின்றது.

அதாவது, சாஸ்திரம் கர்மங்களைப் பற்றி கூறும் பொழுது, மூன்று கர்மாக்களைப் பற்றி பேசுகின்றது.

அதில் உடல் எடுத்து வந்த உயிர், இந்த உடலில் எதை அனுபவிக்க விரும்புகின்றதோ, அதை ஏற்கனவே தான் சேகரித்து வைத்துள்ள **‘சஞ்சித கர்மா’** என்ற பாவ, புண்ணிய மூட்டையில் இருந்து, கொண்டு வந்து, இந்த உடலில் அனுபவித்து தீர்ப்பதாகவும், அதுவே, **‘பிராரப்த கர்மா’** என்றும், அந்த கர்மபலனின்படி பிறந்து, அந்த பாவ, புண்ணியங்களுக்கு ஏற்றவாறு, இந்த உடலின் வாயிலாக சுக, துக்கங்களை அனுபவிக்கின்றது என்று சாஸ்திரம் கூறுகின்றது.

அத்துடன், இந்த உடலில் ஏற்கனவே கொண்டு வந்த பிராரப்தக் கர்மாவுடன், இப்பொழுது எடுத்துள்ள இந்த உடலின் வாயிலாக உண்டாக்கிக் கொண்ட நன்மை, தீமைகளை **‘ஆகாமிய கர்மா’** வாக சேகரித்துக் கொண்டு சென்று, மீண்டும் சஞ்சித கர்மாவுடன் இணைத்துக் கொண்டு, அதில் உள்ள ஆசைகளான பாவ, புண்ணியங்களுக்கு ஏற்ப உடல் எடுத்து, மேலும் பல பிறவிகளை அந்த உயிர் எடுக்கின்றது என்று கூறப்படுகின்றது.

இங்கு பெரும்பாலானவர்களுக்கு வருகின்ற குழப்பம் என்னவெனில், வேதாந்த சாஸ்திரம் ஒரே பரம்பொருளை **“ஆன்மா”** என்கின்றது. சைவ சிந்தாந்த சாஸ்திரம் அதையே **பசு, பதி, பாசம்** என்று

கூறி, உயிரை இறைவனில் இருந்து வேறாக விளக்குகின்றது.

மற்ற சில துவைத சாஸ்திரங்கள் ஜீவான்மா பல உள்ளன என்றும், பரமான்மா ஒன்று உள்ளது என்றும் உபதேசிக்கின்றது.

இதில் எது சரி? என்றால், இருப்பது ஒன்று மட்டுமே, அதுவே இறைவன் என்று கூறும் பொழுது, எங்கிருந்து இந்த உடல் வந்தது, மனம் வந்தது, உயிர் வந்தது என்பதை சற்று யோசிக்க ஆரம்பித்தால் மட்டுமே அரிய உண்மைகளை நாம் அறிய முடியும்.

இதை விடுத்து, காலத்திற்கு ஏற்றவாறு கொண்டு வரப்பட்ட பல்வேறு சாஸ்திரங்களில், பலவிதமாக கூறப்பட்டுள்ள தத்துவங்களை எல்லாம், பலவாறாக மனதில் கணக்கு போட்டு, அவைகள், 96, 24, 21, என குழப்பிக் கொண்டு இருப்பதை அவசியம் விட்டு விட வேண்டும்.

மற்றொரு சாரர் கிடைத்த இந்த மனித உடலில் இன்பத்துடன் தன் மனைவி மக்களுடன் இருந்து விட்டுப் போவதை விடுத்து, வீணான இதுப்போன்ற விசாரணைகளில் ஈடுபட்டு, தன் இன்பத்தை இழக்க அவன் தாயாராக இல்லை.

ஆகவே, இதுவரை இங்கு கூற வருவது என்ன என்பது உங்களுக்குப் புரிந்திருக்கும் என்பதினால், இந்த கண்களால் காண முடியாத சூக்ஷுமமான மனம், நம் கண்களுக்குத் தெரிகின்ற இந்த ஸ்தூல உடலைக் கொண்டு தன் ஆசைகளை அனுபவித்து தீர்க்கின்றது என்பதை அவசியம் அறிந்துக் கொள்ள வேண்டும்.

இதைவிடுத்து, மனம் வேறு, இந்த உடல் வேறு, ஆன்மா வேறு என்று பலவாராக அனைத்தையும் பிரித்துப் பார்த்துக் கொண்டிருப்பவர்கள், இந்த பிரிவினைகளில் சிக்கிக் கொண்டு, பிறவாப் பெரு நிலையை நிச்சயம் அடைய முடியாது என்ற அரிய உண்மையை அவசியம் ஒவ்வொருவரும் அறிந்தாக வேண்டும்.

அதாவது, நம் கண்களால் காண முடியாத சூக்ஷுமமான உள்ள மனம், கண்களுக்குத் தெரிகின்ற இந்த ஸ்தூல உடலை எடுத்துக் கொண்டு, அதன் ஆசைகளை அனுபவித்துக் கொள்கின்றது என்பதை நாம் அவசியம் அறிய வேண்டிய உண்மை.

இதில், பிறவாப்பெரு நிலையை விரும்புகின்ற நாம் இந்த மனதிற்கு கொடுக்கக்கூடிய தீணியை நிறுத்தினால் மட்டுமே, இந்த மனம் பட்டினியால் சற்று இளைத்து, எதை அறிய வேண்டுமே அதை அறிய முயற்சிக்கும். அதை விடுத்து, அதற்கு மேலும்,

மேலும், பல்வேறு தீனிகளை நாம் கொடுத்துக் கொண்டே இருந்தால், அது நிச்சயமாக நம்மை நிம்மதியாக இருக்க விடாது.

அதாவது, இங்கு ‘**நிம்மதி**’ என்று கூறவருவது, அந்த ஏகப்பரம்பொருளின் ஏகாந்த நிலையைப் பற்றிக் கூறுகின்றோம்.

மேலும், இந்த மனம் ஒன்றே **“நான்”** என்ற அஹங்காரத்தினால், அதிகம் ஆட்டம் போடுகின்றது. இந்த ‘**நான்**’ எது? என்று அறிந்துக் கொள்வதையே நம் மகான்கள் **“நான் யார்?”** என்று நம்மை விசாரித்து அறியச் சொல்கின்றனர்.

ஆனால், நாம் என்ன செய்கின்றோம் என்றால், இது தெரியாமல், மேலும் மேலும் பல்வேறு விசயங்களை அது ஆன்மீக வாழ்க்கை ஆகட்டும், அல்லது ஆடம்பரமான உலகியல் வாழ்க்கை ஆகட்டும், அதில் மேலும், மேலும் பல குப்பைகளைக் அதற்கு உணவாகக் கொடுத்து, இந்த மனதை இல்லாமல் செய்வதற்குப் பதிலாக, மேலும் இந்த மனதை இன்னும் புஷ்டியுடன் வளர்வதற்கு ஏதுவாக ஊட்டச்சத்துக்களைக் கொடுத்து, உற்சாகமாக அதன் போக்கில் வளர்த்து வருகின்றோம்.

எப்பொழுது, இதுப்போன்ற விசய சுகங்களை விரும்பாமல், அவைகளை விட்டு விலகுகின்றோமோ, அப்பொழுது மட்டுமே, இந்த மனம் அனுபவிக்க விசயங்கள் எதுவுமின்றி, இந்தப் பரு உடலை எடுக்க முடியாமல், இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும்.

இது ஒன்றே **“நான்”** என்ற மனதை, அதாவது அஹங்காரத்தை அடியோடு அழிக்கும் அருமையான வழிமுறையாகும்.

இந்த மனம் எப்படி பயிற்றுவிக்கப் படுகின்றதோ, அதற்கேற்றவாறு தன்னை மாற்றிக் கொண்டு, அதன் சம்பந்தமான சேகரிக்கப்பட்ட விசயங்களை எடுத்துக் கொண்டு வந்து, இந்த உடலில் வாயிலாக அனுபவிக்கின்றது.

அதனால்தான், ஒருவர் பூசை, புனஸ்காரங்கள், ஆலய வழிபாடுகள் மேற்கொள்கின்றார் என்றால், அவர் மனம் அப்படிப் பயிற்றுவிக்கப்பட்டுள்ளது.

மற்றொருவர், மகா மோசமான காரியங்களை செய்கின்றார் என்றால், அவரது மனம் அத்தகைய வாழ்க்கைச் சூழ்நிலையில், அவ்வாறு வளர்க்கப்பட்டு அதற்கேற்ற செயல்கள் அவரிடம் வெளிப்படுகின்றது என்பதை நாம் அனைவரும் அறிய வேண்டும்.

அவரைக் குறைக்கூற முடியாது. காரணம் அதுபோன்ற வாழ்க்கைச் சூழ்நிலையில் அவர் பிறந்து வளர்ந்ததால்தான், அத்தகைய அற்பமான மன ஆசைகளை அவர் நிறைவு செய்ய விரும்புகின்றார் என்பதை நாம் அனைவரும் அவசியம் அறிந்தாக வேண்டும்.

எனவே, இதுப்போன்ற ஏற்றத்தாழ்வுகளுக்குக் காரணம், மனிதர்களின் பயிற்றுவிக்கப்பட்ட மனமே என்பதை அறிந்து, அவர்களை குற்றம் கூறுவதை விட்டு விட வேண்டும்.

ஏனெனில், இது அவர்களின் மனதின் இயல்பே தவிர, அவர்களின் உண்மையான இயல்பு என்று கூறிவிட முடியாது. காரணம், மனிதனின் உண்மையான இயல்பு என்பது, அந்த ஏகாந்த **'இறைவனின் இயல்பு'** என்று அறிந்துக் கொள்ள வேண்டும்.

அதனால்தான் அன்றைய முன்னோர்கள் ஐம்புலன்களின் விசயத்தில், அவசியம் கருதி, அதனை பயன்படுத்த வேண்டும் என்று, மனிதனை எச்சரிக்கின்றனர்.



அதற்காகவே, மனிதனை நோக்கி அவனுக்கு உபதேசமாக, தீயவைகளைப் பார்க்காதே!, தீயவைகளைக் கேட்காதே!, தீயவைகளைப் பேசாதே! என்று அறிவுறுத்துகின்றனர்.

ஆனால் நாம் எதை புரிந்துக் கொண்டாலும் அரைகுறையாகப் புரிந்து வைத்துக் கொண்டு, நாம் புலன்களை முழுவதுமாக துறந்துவிட வேண்டும் என்றவுடன் சாப்பிடாமல் உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொள்கின்றோம்.

அல்லது, உடனடியாக இந்த மனதைக் கட்டுப்படுத்தப் போகின்றேன் என்று காவி வேஷ்டி கட்டிக் கொண்டு, சந்நியாஸம் எடுத்துக் கொண்டு, அனைத்தையும் துறப்பதே ஆன்மீகம் என்று அதில் ஈடுபடுகின்றோம்.

இதுப்போன்ற அறியாமைகளினால், நாம் ஏகப்பட்ட தவறுகளைச் செய்து வருகின்றோம்.

இன்னும் சிலரோ, இந்த மனதைக் கட்டுப் படுத்தக்கூடிய பல்வேறு மூச்சுப்பயிற்சிகளைச் செய்து, இந்த மனதையும், உடலையும் வருத்திக் கொள்கின்றனரே தவிர, நம்மால் பயிற்றுவிக்கப்பட்ட மனம் நம் பயிற்சிக்கு ஏற்றவாறு, இந்த உடலை வடிவமைத்துக் கொள்ளும் என்ற அரிய உண்மையை அறிய மறுக்கின்றனர்.

அதனால், இந்த உடலை சில பயிற்சிகளின் வாயிலாக மாற்றி மனதை மாற்ற முயற்சிக்கின்றனர்.

அதாவது, இவர்களைப் பொருத்தவரை அது எதற்கு என்று தெரியாமல், அவர்கள் குரு கூறியபடி செய்து வருகின்றனர்.

ஆனால், உண்மை என்னவெனில், அந்த குரு எதற்காக அவ்வாறு கூறினார் என்றால், அவர் இந்த உடலும் மனமும் ஒன்று என்று அறிந்துக் கொண்டதை வைத்து, இந்த உடலில் உள்ள மூச்சுக் காற்றை மாற்றினால், இந்த உடலும், மனமும் மாறிவிடும் என்பது அவரது தனிப்பட்ட எண்ணம்.

அதனால், அந்த குரு தங்கள் சிஷ்யர்களுக்கு, இதுப்போன்று மூச்சுப் பயிற்சி முறைகளைக் கற்றுக் கொடுத்து, அதன் வாயிலாக, அவர்கள் மனதை மாற்ற முயற்சிக்கின்றார்.

இதில் நாம் எந்தக் கூட்டத்துடன் இணைந்து ஓடிக்கொண்டிருக்கின்றோம். இதில் எது நமக்கு சரியாக வரும்? என்பதை சற்று ஆழ்ந்து யோசித்து, மனதைக் கடந்து, அடுத்த பரிமாணமான புத்தியினால் நன்கு ஆராய்ந்து, அவைகளின் உண்மைத்தன்மையை அறிந்துக் கொண்டால் மட்டுமே, நாம் எடுத்த இந்த பிறவியின் பயனை மிகவும் சரியாக அடைந்திட முடியும்.

அதனால், நாம் என்ன கூற வருகின்றோம் என்றால், பிறவாப்பெரு நிலையை விரும்புகின்ற வர்களுக்கு மட்டுமே **"மோக்ஷம்"** தேவை.

மற்றவர்களுக்கு அவர்கள் மனம் போனபடி வாழ்ந்துவிட்டு, அந்த மனதில் சேகரித்துக் கொண்ட எண்ணங்களுக்கு ஏற்றவாறு, உடல்களை எடுத்து வந்து, அவைகளை அனுபவித்து, அவர்கள் வாழ்ந்து விட்டுப் போகட்டும்.

அது அவர்களுடைய தனிப்பட்ட விருப்பம்.

அதாவது, ஆன்மீகத் தேடுதல்களில் ஆழமாகத் தன்னை அறிய ஆர்வம் உள்ளவர்கள் மட்டுமே இந்த மோக்ஷத்தை அறிய விரும்பி, ஆர்வமுடன் இங்கு வந்திருப்பதினால், இந்த அரிய உண்மைகளை இங்கு பகிர்ந்துக் கொள்ளப்படுகின்றது.

இது எதுவுமே எனக்கு அவசியம் இல்லை என்பவர்களுக்கு இந்த இணையதளமும், மற்ற இணையதளங்களும் அவர்களைப் பொருத்தவரை, ஒரு பொழுதுப் போக்கு இடம் அவ்வளவே!

ஆகவே, நம்மைப் பொருத்தவரை மோக்ஷம் என்பது 'பிறவாமை' என்று அறிந்து வைத்துக் கொண்டு, இந்த உடல் பிறக்காமல் இருக்க என்ன வழி என்று, ஏகப்பட்ட விசயங்களை ஆராய்ந்து, இந்த மனதை மேலும், மேலும் பெரும் குப்பைகளால் நிறைத்துக் கொண்டு, மிகப்பெரிய குப்பை மேடாக மாற்றிக் கொள்ளாமல், இங்கு கூற வருகின்ற விசயங்களை முழுவதுமாக உள்வாங்கி, உடனடியாக அதற்கான அனுபவத்திற்கு வந்துவிட வேண்டும்.

அதைவிடுத்து, அடுத்தடுத்து விசயங்களை யாராவது கூறிக் கொண்டே இருக்க வேண்டும். நாமும், அவைகளை காது குளிரக் கேட்டு இன்புற வேண்டும் என்று எதிர்ப்பார்ப்பது, காதுகள் என்ற ஒரு புலனில் நாம் சிக்கிக் கொண்டிருப்பதை அறிய

முடியாமல், நம் மனமே நம்மை ஏமாற்றிக் கொண்டிருப்பதை அறியாமல் இருக்கின்றோம்.

மேலும், பல ஆன்மீக புத்தகங்களையும், வாட்ஸப் குழுக்களையும், முகநூல்களையும் முற்றிலும் ஆராய்ந்துக் கொண்டிருப்பதை விட்டு, விட்டு, இவைகள் அனைத்தும் மனதிற்குக் கொடுக்கின்ற மகத்தான உணவு என்பதை அவசியம் அனைவரும் அறிய வேண்டும்.

நன்றாக யோசித்துப் பாருங்கள்!

நாம் இந்த உடல் எடுத்து வந்திருப்பதே, ஏற்கனவே ஏற்றி வைத்துக் கொண்டுள்ள ஏகப்பட்ட குப்பைகளை அனுபவித்து தீர்க்கத்தான் என்பதை அறியாமல், இன்னும் சில குப்பைகளை இந்த மனதிற்குத் தீனியாகக் கொடுக்க, கொடுக்க இந்த மனம் இன்னும் நன்றாக வளருமே தவிர, இதில் இருந்து முழுமையாக விடுபடாது.

இந்த அறிய உண்மையை அறிந்துக் கொண்ட நம்முடைய பண்டைய ரிஷிகள் சிறு வயதிலிருந்தே மனதைப் பண்படுத்தக் கூடிய பல அரிய விசயங்களை மட்டுமே மனதிற்கு பயிற்றுவித்தார்கள்.

ஆனால், நாம் இன்றைய நவீன வாழ்க்கை முறையில், பல நவீன பொருட்களின் மோகத்தில் சிக்கிக் கொண்டு, இந்த மனதை மேலும், மேலும் குப்பைகள் ஆக்கிக்கொண்டு இருக்கின்றோம்.

மேலும், பிறவாப்பெரு நிலைக்கு வழி தேடுகின்றேன் என்று, இதுப்போன்ற ஆத்ம ஞான விசயங்களை அறிந்துக் கொள்வதற்காக அனேக ஆன்லைன் பாடங்களையும், ஆச்சாரியர்களையும் பிடித்துக்கொண்டு, இந்த பிறவியிலிருந்து விடுபட முயற்சிக்கின்றோம்.

மேலும், சற்று ஆழமாக யோசித்துப் பாருங்கள் இது உங்களுக்கு சரியாக வருமா என்பதை?

எனவே, இங்கு வெளிப்படுத்துகின்ற விசயங்கள் அனைத்துமே, அனுபவ உண்மைகளை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு, ஆன்லைனில் அளிப்பதற்குக் காரணம், இன்றைய இளைய தலைமுறையினர் பலரும் பல்வேறு சூழ் நிலைகளின் காரணமாக, இணையத்தின் வாயிலாக, எப்பொழுதுமே கணினி இயந்திரத்தில் இணைந்து இயங்கிக் கொண்டு இருப்பதினால், இவர்களுடன் இணைவது என்பது, இணையத்தினால் மட்டுமே சாத்தியம் என்று கருதி, இணையத்தின் வாயிலாக மட்டுமே போதிக்கப் படுகின்றது.

ஆதலால், உண்மையிலேயே பிறவிப் பெருந் துன்பத்தில் இருந்து விடுபடவேண்டும் என்று விரும்பு கின்றவர்கள், இங்கு கூறப்படுகின்ற விசயங்களை சற்று பரந்த மனதுடன் பார்த்தீர்களேயானால், வாழும் பொழுதே அந்தப் பரம்பொருளின் பரவசத்தை பரிபூரணமாக அனுபவிக்க முடியும் என்பதை மிக நுண்ணிய அறிவால் அறியலாம்.

அதற்கான வழிமுறைகளை இந்த பாடங்களின் வாயிலாக உங்களுக்குக் கொடுக்கப்படும்.

உடனே, பல்வேறு  பயிற்சி முறைகளையோ, உபாசனை மந்திரங்களையோ பாடங்களாக இங்கு எதிர்பார்த்தீர்கள் என்றால், நிச்சயம் நீங்கள் எமாந்து விடுவீர்கள்.

இருக்கின்ற ஒன்றேயான அந்த ஏக சத்தியத்தை அறிந்து, அதனிடம் ஏகாந்தமாக சரணடைவது பற்றிய பாடங்களே போதிக்கப்பட உள்ளன.

சரணடைவது என்றவுடன், உடனே உங்கள் மனம் அங்கு துவைதம் அல்லவா உண்டாகின்றது? என்று யோசிப்பதை என்னால் அறிய முடியாமல் இல்லை.

அவசரப்படாமல், அறிய முயற்சிக்கவும்.

அதாவது, இருப்பது ஒன்று மட்டுமே என்றும், அதுவே பூரணப் பொருள் என்றும் உரைத்துவிட்டு, அதற்கு வேறாக உங்களை அதை வணங்குங்கள், சரணடையுங்கள் என்று இங்கு கூறவரவில்லை.

பூரணத்திற்கு வேறாக, ஒரு பொருள் இருக்கு மானால், அதைப் பரிபூரணம் என்று அழைக்க முடியாது, என்பதை அனைவரும் அறிய வேண்டும் என்று அறிவுறுத்தவே, இங்கு சரணாகதி பற்றிக் கூறப்படுகின்றது.

ஆகவே, இருக்கின்ற அந்த ஏகப்பொருளின், எல்லையில்லாப் பரமானந்தப் பெருவெளியில், ஒரு சிறு பகுதியே நாம் என்பதை, அறிந்தவுடன், அதன் காரியத்தை செய்யக்கூடிய கருவியாக மட்டுமே நாம் மாறி விடுவதால், அதைவிடுத்து வேறாக நாம் இல்லை என்ற மிகப்பெரிய உண்மையை உரைக்கவே இந்த பாடங்கள் அனைத்தும்.

இதையே **“சரணாகதி”** என்று அறிய வேண்டும். அதைவிடுத்து, அதற்கு வேறாக நீங்கள் இருந்துக் கொண்டு, அதற்கு தாஸனாகவோ, நண்பனாகவோ, பக்தனாகவோ, சரணடைவது என்பது, அதை பூரணமாக கருதாதவர்களின் வீணான காரியம் என்று அறிய வேண்டும்.

அதாவது சரணாகதியின் நோக்கம் என்ன எனில், மனிதன் **“நான்”** என்ற அஹங்காரத்தில் சிக்கிக் கொண்டு, அந்த பரிபூரண பரம்பொருளுக்கு எதிராக, இவனே இந்த உலகக் காரியங்களை ஆற்றுவதாக ஒரு மாயையிலே மயங்கிக் கொண்டு, இவன் எதை எதையோ செய்துக் கொண்டு, அவைகளை அஹங்காரத்தின் வாயிலாக *நான் செய்தேன், நான் கொடுத்தேன், நானே காரணம்,* என்னால்தான் அனைத்தும் நடைப்பெறுகின்றது என்ற அறியாமையிலே மனிதன் இவ்வாறு வாழுகின்றான்.

இவனது இத்தகைய தவறான போக்கினை அறிந்த அனைத்து மகான்களும்**, “நான் யார்?”** என்று உன்னை நீ விசாரித்து அறிந்தாயானால், உன்னுள்ளே ஒளிர்கின்ற ஒளிச்சுடராய், அறிவுச் சுடராய், ஆனந்தப் பொருளாய், எங்கும் இருக்கின்ற அந்த பரிபூரணத்தின் வசத்திலே தன்னை முழுமையாக ஒப்படைத்துவிட்டு, **‘சும்மா** இரு’ப்பதே சுகம் என்று அறிவுறுத்தி இருக்கின்றார்கள்.

அந்த அரிய உண்மையை நாம் அறிந்துக் கொண்டால் மட்டுமே, அவனால், நடைப்பெறுகின்ற இந்த உலகக் காரியங்களை, அவனது கருவியாக மட்டுமே நாம் இருந்து, இவைகளைச் செய்துக் கொண்டிருக்கின்றோம் என்ற உண்மையை உணர்ந்துக் கொள்வோம். இதனால், அறியாமையினால் நம்மிடம்

மனதினால் ஏற்படுத்திக் கொண்ட **“நான்”** என்ற அஹங்காரம் அப்பொழுதே நம்மை விட்டு மறைந்து விடும். இதை மட்டுமே நாம் அனுபவத்திற்குக் கொண்டு வர வேண்டும். அதற்காக நாம் நம்மை அந்த பரிபூரணத்துடன், பூரணமாக ஒப்படைத்து ஒன்றிணைந்து விட வேண்டும்.

ஏனெனில், நாம் நம் அறியாமையினாலே, அந்த பரிபூரணத்திற்கு வேறாக இருப்பதாக, நம்மை நாம் நினைத்துக் கொண்டு, *நான் இந்த உடல், நான் இந்த மனம், நான் இந்த உயிர்* என்று துவைத பாவனையில் (இருமைகளில்) இருக்கும்வரை நம்மை நாமே ஏமாற்றிக் கொண்டு, இந்த மனதின் காரணமாக பல்வேறு குழப்பங்களில் சிக்கி கொண்டிருக்கின்றோம்.

ஆகவே, இந்த அறியாமையில் இருந்து முற்றிலும் நாம் விடுபட, இதுப்போன்ற விசாரத்தின் வாயிலாகத் தெளிவை அடைந்து, எல்லாமே ஈஸ்வர காரியமாகச் செய்துக் கொண்டு வரும் பொழுது, இங்கு தனியாக நாம் இல்லை என்பதினால், நமக்கு எந்த பாவ, புண்ணியங்களும் உண்டாகாது. எந்த கர்மாக்களும் நமக்கு கிடையாது.

**இருப்பதெல்லாம் இறைவன் ஒருவன் மட்டுமே!**

**ஓம் தத் சத்!**

